திரர் இந்தத் திருநாமமே கொண்டவராய் அட்வகேட்டாக விளங்கிவருகிறார். ஸ்ரீ ஸ்வாமி ப்லவ வருடத்தில் திருவவதரித்து எழுபத்துமூன்று திருநக்ஷத்ரம் இந்த விபூதியை யலங்கரித்திருந்து ஆனந்த ஸம்வத்ஸரத்தில் திருநாடலங்கரித்தவர்.

# மாம்பள்ளம் ஸுதர்சநாசார்யர் ஸ்வாமி

இந்த மஹாபுருஷர் திருநாட்டுக்கெழுந்தருளி முப்பத்தைந்து ஸம்வத்ஸரமாகிறது உலகத்தில் மிகவும் ப்ரஸித்தமாக வழங்கிவருகின்ற "நபூதோ நபவிஷ்யதி" என்கிற வாக்கானது இந்த ஸ்வாமி ஒருவருக்கே தகும். உலகத்தில் மற்றமஹான்கள் ஸம்பாதிக்கும் யோக்யதைகள் மற்றும் பலரிடத்தும் காணக்கூடியவையேயாகும். இந்த ஸ்வாமி ஸம்பாதித்திருந்த யோக்யதைகள் முக்காலத்திலும் அநிதரஸாதாரணமென்பதை விஜ்ஞாபிப்பதற்கும் அடியேன் அநர்ஹன். தென்னாடு முழுவதிலும் இவருடைய யோக்யதைகள் நன்கு பரவியிருப்பதால் அடியேன் எடுத்துரைப்பது பிஷ்டபேஷணமேயாகும். வேதத்திலும்' ஆழ்வாரருளிச்செயல்களிலும், ஆசார்ய திவ்ய ஸூக்திகளிலும், இதிஹாஸ புராணங்களிலும், காவ்ய நாடகாலங்காரங்களிலும் இந்த ஸ்வாமி பரிச்ரமப்பட்டு ஸம்பாதித்திருந்த யோக்யதை ஒருவர்க்கும் ஒரு புருஷாயுஸ்ஸில் ஸம்பாதிக்கக்கூடியவையல்ல என்பது ஸத்யம். இந்த ஸ்வாமி பெரும்பாலும் வித்யாக்ரஹணம் செய்தது ஸ்ரீபெரும்பூதூரில். திவ்யதேச வாஸத்தையே பரமபுருஷார்த்தமாகக்கொண்டு பலபல திவ்யதேசங்களில் வாழ்ந்துகொண்டு நியதமுமத்தாணிச் சேவகம் புரிந்தார். நம்பெருமாள் ஸந்நிதியில் ஏழெட்டு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து வேதபாராயண கைங்கரியம் நிர்வஹித்தருளினார். திருநின்றவூர், திருநீர்மலை, திருவல்லிக்கேணி, ஆழ்வார்திருநகரி முதலான பல தலங்களில் மாதக்கணக்கிலும் வருஷக்கணக்கிலும் எழுந்தருளியிருந்து உபயவேத கோஷ்டிகளையும் நிர்வஹித்தருளினார்.

1902ஸு பரிதாவி ஸம்வத்ஸரத்தில் 'அதாவது 76 ஆண்டுகட்குமுன்பு இந்த ஸ்வாமி திருவேங்கடமுடையானுத்ஸவம் ஸேவிக்கத் திருமலைக்கு எழுந்தருளியிருந்தார். அப்போது,(கீழே ப்ரஸ்தாவித்த)ஸ்ரீமத் திருமலை திருப்பதி அனந்தாண்பிள்ளை, புரிசை ஸ்ரீ ரங்காசாரியர் ஸ்வாமியும் அவ்விடம் எழுந்தருளியிருந்தார். அப்போது அந்த மஹாபுருஷர் இந்த ஸ்ரீ ஸுதர்சநாசார்யஸ்வாமியின் அப்ரதிம யோக்யதைகளிலே அதிமாத்ரம் ஈடுபட்டு வெகு நிர்ப்பந்தப்படுத்தி இவருடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை ஸ்வீகரித்ததை அடியேன் ஸாக்ஷாத்கரித்தவன். ஸ்ரீமத் புரிசை ஸ்வாமியைக்காட்டிலும் இவர் இருபத்தைந்து திருநக்ஷத்ரம் சிறியவர். அப்படியிருந்தும் "ஸ்ரீ வைஷ்ணவத்வபூர்த்தியுள்ளது இவரொருவர்க்கே" என்று அந்த ஸ்வாமி நன்கு கண்டறிந்து வெகு பலாத்காரமாகவே இவருடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை ஸ்வீகரித்தருளினரென்றால் இதைவிட அதிகமாக இந்த ஸ்வாமியின் பெருமையைப் பற்றி எடுத்துரைக்கவேண்டுமோ? ஸ்ரீ காஞ்சியில் அடியேனை வியாஜமாக்கிக் கொண்டு உலகம் புகழநின்ற வேதவேதாந்த வைஜயந்தி வித்யாசாலையை நிறுவிய மஹாநுபாவர் இவரேயாவர். இவர் தம்முடைய பொன்னடிக்கால் நலத்தினாலேயே காஞ்சியில் பலபலர் யோக்யதைகள் பெற்றார்கள். காஞ்சியில் அனேக திவ்யதேசங்

களில் அவிச்சின்னமாக வேதபாராயண கைங்கரியம் நடந்தேறும்படி பல வித்யார்த்திகளை க்ரமாந்த யஜுர்வேதத்தில் தேறினவர்களாம்படி அத்யயனம் செய்வித்தருளியவர் இந்த ஸ்வாமியே.

இவரே ஆழ்வார் திருநகரியிலும் இரண்டு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து அவ்விடத்திலும் வேதபாராயண கைங்கர்யம் நடைபெற்றுவர முயற்சி செய்தருளினார். அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கும்போது திருமேனியில் சிறிது ஆரோக்கியக்குறையுண்டாகி ஸ்ரீ காஞ்சிக்கு மீண்டெழுந்தருளி தாது வருஷம் பங்குனி மாதத்தில் தம்முடைய திருமாளிகையில் திருநாட்டுக்கெழுந்தருளினார்.

இந்த ஸ்வாமி இடைவிடாது ஏற்றுக்கொண்டிருந்த வித்யாபரிச்ரமங்களைப் பார்க்கும்போது இவர் அமாநுஷர் என்றே அறுதியிடும்படியிருந்தது. *பொருளல்லாதவென்னைப் பொருளாக்கி யடிமை கொண்டாய்* என்று பாவியேனும் அநுஸந்தித்து ஸத்தை பெறும்படி அடியேனை ஒரு பதார்த்தமாக்கியருளின இம்மஹாசார்யர் திறத்தில் *எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் உன்றன்னோடுற்றோமேயாவோம் உனக்கேநாமாட் செய்வோம்* என்கிற ஆசம்ஸையல்லது மற்றொன்றுமறியேன். *

## 7 ஸ்ரீமதுபயவே குண்டலம் நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமி

இத்திருநாமம் பூண்ட மஹாஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரில் உபயவேதாந்த வர்த்திநீ வித்யாசாலையை முன்னம் அபிவிருத்திக்குக் கொண்டுவந்த மஹாபுருஷர்களில் தலைவர். இவரிடத்தில் ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை அதிகரித்து நாளைக்கும் ஜகத்ப்ரஸித்த வித்வச் சிகாமணிகளாக விளங்கும் மஹான்கள் பலருளர். ஸ்ரீபெரும்பூதூரில் வித்வத் வரிஷ்டராய் விளங்கியவரும் மஹாவாக்மியுமான ஸ்ரீமத் உபயவே. தி. ஆஸூரி. ராமாநுஜாசார்யர் ஸ்வாமி, இந்த ஸ்ரீ நரஸிம்ஹாசார்யர் ஸ்வாமியின் அந்தேவாஸி என்பதொன்றே இவருடைய அப்ரதிம வைபவத்தை விளக்கவல்லதாகும். இவருடைய ஜன்மபூமி நைஜாம் இலாகாவில் சேர்ந்த 'இந்தூர்' என்னும் அக்ரஹாரம். வடதேசத்திலிருந்த ஸ்ரீ. உ. வே. இல்லந்திர ராகவாசாரியர் ஸ்வாமி யென்பவரிடத்திலும் மற்றும் சில மஹா வித்வான்களிடத்திலும் இவர் ஸாமாந்ய சாஸ்த்ரங்கள் வாசித்து, கத்தவால் வனபர்த்தி வேங்கடகிரி முதலான ஸம்ஸ்தானங்களில் பரீக்ஷை கொடுத்து வித்வான் என்னும் விருதும் ஸ்வர்ண குண்டலமும் பெற்றவர். அதுபற்றியே குண்டலம் ஸ்வாமி யென்றே இவர் வழங்கப்பட்டுவந்தார்

இருபத்தைந்து திருநக்ஷத்திரத்திற்குள் சதுச்சாஸ்த்ர வித்வானாகி ஆங்காங்கு வாக்யார்த்தமும் சொல்லி ப்ரஸித்திபெற்று இவர் இருபத்தாறுவது திருநக்ஷத்திரத்தில் ஸ்ரீபெரும்பூதூர் வந்து சேர்ந்து. அப்போது அவ்விடத்தில் பர்யாய பாஷ்யகாரராக விளங்கி வந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி எம்பார் ஜீயர்ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீ பாஷ்யாதிகளை அதிகரித்தார். அவ்விடத்திலேயே மஹா வ்யாபகராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ. உ.வே. ஆடூர் ரங்கஸாமி அய்யங்கார்

ஸ்வாமி ஸந்நிதியிலே அருளிச்செயல்களை ஸாங்கமாக ஓதி பகவத் விஷயாதி க்ரந்தங்களை அதிகரித்தார். இப்படி முப்பத்தைந்து திருநக்ஷத்ரம் வரையில் அத்யாத்ம வித்யைகளை அதிகரித்துத் தலைக்கட்டியபின் அவ்வூர் ஸம்ஸ்க்ருத கலாசாலைக்கு ப்ரதான பண்டிதராகவும் அத்யக்ஷராகவும் இவர் வரிக்கப்பட்டார். அந்த வித்யாசாலையிலும், தனியாகத் திருமாளிகையிலும் இந்த ஸ்வாமி பக்கலில் ஸாமாந்ய சாஸ்த்ரங்களை வாசித்தும் ஸ்வரூப க்ரந்தங்களை அதிகரித்தும் உத்தீர்ணரானவர்கள் பலர்.

கி. பி. 1890ஆ முதல் 1912ஆ வரையில் (இருபத்திரண்டு ஸம்வத்ஸரம்) இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் அத்யக்ஷராக எழுந்தருளியிருந்து வித்யாதாநம் செய்தருளினார். ஐம்பத்தேழாவது திருநக்ஷத்திரத்தில், ஸ்ரீபெரும்பூதூரிலேயே திருநாட்டுக் கெழுந்தருளினார்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, அயோத்யா ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி இவர் ஸந்நிதியிலேயே ஸ்ரீ பாஷ்ய கீதாபாஷ்யங்கள் அதிகரித்தார். ஷை ஸ்ரீ பெரும்பூதூர் கலாசாலைக்கு (இந்த ஸ்வாமிக்குப் பிறகு) அத்யக்ஷராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ உ. வே. வித்யாபூஷணம். காழியூர் ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமியும் இவர் பக்கலிலேயே வித்யாஸர்வஸ்வமும் அதிகரித்தார். மற்றும் பல திசைகளில் நின்றும் வந்திருந்து இவர் பக்கல் வித்யாக்ரஹணம் பண்ணி ப்ரஸித்த வித்வான்களாக விளங்கினார் பலருண்டு. இந்த யோக்யதைகளெல்லாம் ஒருபுறமிருக்க, *பயிலும் சுடரொளி* நெடுமாற்கடிமைகளின் ப்ரமேயத்தைப் பரிபூர்ணமாக அநுஷ்டித்துப் போந்தவர் இந்த ஸ்வாமி யொருவரேயென்பது இவர்க்கு அஸாதாரணமான பெருமை, "தொடையொத்த துளபமும் கூடையும் பொலிந்து தோன்றியதோள் தொண்டரடிப்பொடி" என்னுமாபோலே அனேக காலம் புஷ்பக் குடலையுடனேயே இவர் ஸேவை ஸாதிப்பது வழக்கம். ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டவளவிலேயே நெடுந்தூரத்திலிருந்தும் ஸாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு உபசரிக்கும் பரிசு இவரொருவர்க்கே அஸாதாரணச் செல்வமாயிருந்தது.

இந்த ஸ்வாமி திருமுன்பே ஸ்ரீபெரும்பூதூரில் நடந்ததொரு விநோதமான இதிஹாஸத்தை விஜ்ஞாபித்துத் தலைக்கட்டுகிறேன். பாலவேடு ரங்கராமாநுஜாசாரியர் என்கிறவொரு வடகலை வித்வான் விசேஷோத்ஸவகாலங்களில் ஸ்ரீபெரும்பூதூர்க்கு வருவர். குண்டலம் ஸ்வாமியிடத்தில் ஏதாவது குதர்க்கம் பேசுவர். ஒரு ஸமயம் அவர் குண்டலம் ஸ்வாமியை நோக்கி. "பாஷ்யகாரர் வாழி திருநாமத்தில் *அறுசமயச் செடியதனை அடியறுத்தான் வாழியே* என்றிருக்கிறது. அதற்கு விவரணமான மற்றொரு வாழி திருநாமத்தில் "சங்கர பாக்கர யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள்மதம் சாய்வுற" என்றிருப்பதில் ஐந்து மதங்கள்தானேயிருக்கிறது; ஆறுவது மதம சொல்லப்படவில்லையே, அது ஏன்? என்று கேட்கிறார். குண்டலம் ஸ்வாமி அதற்கு ஏதோ ஸமாதானம் ஸாதிக்கப்போகிறார். அப்போது அங்கிருந்த அடியேன் [15. 16 பிராயமுள்ளவன்] "ஸ்வாமிந்! சங்கரபாக்கரவென்கிற

பாசுரத்தில் ஆறு மதங்களும் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறதே; ஐந்து என்று எப்படி ஸாதிக்கிறது; விரலைவிட்டு எண்ணிப்பாரும்'' என்றேன். சங்கர, பாஸ்கர, யாதவ, பாட்ட, பிரபாகர = ஐந்துதானேயப்பா! என்கிறார் அவர். 'பிரபாகரர்' என்றபிறகு (தங்கள்மதம்) என்றிருக்கிறதே. அதைச் சேர்க்காமல் விடலாமோ? என்றேன். அது யாருடைய மதம்? என்கிறாரவர். 'தங்கள் மதந்தான்' என்கிறேனடியேன். அவர்க்கு விளங்கவில்லை. 'தங்கள் வீட்டில் எல்லாரும் ஸௌக்கியமா?' என்று கேட்டால் 'தங்கள்' என்பதற்கு 'உங்கள்' என்று அர்த்தமல்லவா? என்றேன். அப்படி இங்கு என்ன தெரிவிக்கப்படுகிறது? என்கிறாரவர். சங்கரபாஸ்கராதி மதங்களோடுகூட உங்கள் மதத்தையும் எம்பெருமானார் தொலைத்தாரென்று இந்த வாழி திருநாமம் தெரிவிக்கிறது—என்றேன். அவரோ ஒன்றும் தோன்றாது திகைத்து நிற்கிறார். குண்டலம் ஸ்வாமி உள்ளம் பூரித்து ''இந்தப் பிள்ளை யார்? ஜீயர் ஸ்வாமி பேரனா?'' என்று ஸாதித்துக்கொண்டே அடியேனை ஆரத்தழுவி ''அப்படி சொல்லப்பா! இனிமேல் இவர் வம்பு வினாக்களைக் கொண்டு வரமாட்டார்'' என்று கால்மணி காலம் ஏதேதோ ஸாதிக்கிறார் அன்று எங்கும் இதே பேச்சாக இருந்தது. குண்டலம் ஸ்வாமியின் அந்தேவாஸிகளில் ஸாரநாதாசாரியரென்று ஒருவர் இருந்தார். அவர் மஹாமேதாவி இளமையிலேயே நியாயவேதாந்த வித்யாநிதியென்று பெயர் படைத்தார். அவர் மண்ணுலகின் தௌர்ப்பாக்யத்தினால் இளமையிலேயே பரமபதித்தார். அவர் அப்பொழுது உடனிருந்ததனால் அடியேனுக்கு 'தங்கள் மதம்' என்று பெயரிட்டாரவர்.

குண்டலம் ஸ்வாமியை ஸேவித்தவர்கள் இப்போது பலர் இருந்தாலும் அவரிடத்தில் வித்யாக்ரஹணம் பண்ணினவர்கள் ஒருவருமில்லையென்றே சொல்ல வேண்டியிருக்கிறது. ஆந்திர தேசத்தில் அவதரித்த அந்த ஸ்வாமி தமிழ் நாட்டினர்க்கும் மேலாக பகவத்விஷய நிர்வாஹம் செய்துகொண்டிருந்தது மிக வியக்கத்தக்கதாயிருந்தது. .... .... .... *

## ஸ்ரீமதுபயவே பண்டிதரத்னம் கஸ்தூரி ரங்காசார்ய ஸ்வாமி (மைஸூர்)

மைஸூர் மஹாநகரத்தில் பண்டிதரத்னம் கஸ்தூரி ஸ்வாமியென்றே வழங்கப்படும் வித்வான் ஜகத்ப்ரஸித்தர். அந்த ஸ்வாமி சதுச்சாஸ்த்ர வித்வானென்றும், விசேஷித்து நியாயமீமாம்ஸைகளில் ப்ரசண்டபண்டிதரென்றும் சொல்லுவர்கள். சிறந்த க்ராந்திகர் என்பதை அடியேன் நன்கறிந்திருக்கிறேன். அந்த ஸ்வாமியிடத்தில் சாஸ்த்ரங்கள் வாசித்து உத்தீர்ணர்களான வித்வான்கள் பலர். 15, 20 ஸம்வத்ஸரங்கட்குமுன் பரமபதித்த ஸ்ரீமத் பரகால ஸ்வாமி [அபிநவ ரங்கநாதபரகால மஹாஸ்வாமி] கஸ்தூரி ஸ்வாமியின் அந்தேவாஸியென்று ப்ரஸித்தர். இதை ஸ்ரீ ஸ்வாமி தாமே அடியேனிடத்தில் ஸாதித்துமிருந்தார். இப்போது

மடாஸ்தானத்தை அலங்கரித்திருப்பவர்க்கு முற்பட்ட ஸ்வாமி கஸ்தூரி ஸ்வாமியின் திருக்குமாரரேயாவர். அவரையும் கஸ்தூரி ஸ்வாமியென்றே வழங்கி வந்தார்கள். பண்டிதரத்னம் கஸ்தூரி ஸ்வாமியை அடியேன் ஒருதரமே ஸேவிக்க நேர்ந்திருக்கிறது. அந்த வரலாற்றைச் சுருங்க விஜ்ஞாபிக்கிறேனிங்கு.

அடியேனுடைய பன்னிரண்டாவது பிராயத்தில் ஸ்ரீமத் கஸ்தூரி ஸ்வாமி திருமலை யாத்திரையாக வெழுந்தருளினவர் காஞ்சீபுரிக்கும் விஜயம் செய்திருந்தார் அவரோடுகூட மைஸூர் அரசாங்கத்து அதிகாரிகளும் சிலர் வந்திருந்தார்கள். தேவப்பெருமாள் ஸந்நிதிக்குள் நடந்துவந்த சடகோப நிலய பாடசாலையின் சார்பில் அவர்கள் தங்கியிருந்து அந்த பாடசாலையில் ஒருநாள் பரீக்ஷாஸதஸ்ஸு நடத்தினர்கள். அப்பாடசாலையில் வாசிக்கிற வித்யார்த்திகளை மட்டுமல்லாமல் பிறவிடங்களில் வாசிக்கிற (ஸம்ஸ்க்ருத) வித்யார்த்திகளையும் வருவித்துப் பரீக்ஷை நடத்தினர்கள். அதற்கு அடியேனும் போயிருந்தேன். உத்துங்கவித்யார்த்திகளைத் தனியாகவும் கீழ்வகுப்பு வித்யார்த்திகளைத் தனியாகவும் உட்கார வைத்துப் பரீக்ஷை நடத்தி வருகிறார்கள், முராரி நாடகத்தில் பரீக்ஷை நடந்துகொண்டிருக்கிறது. அதில் முதல் அங்கத்தின் முடிவிலுள்ள "யதிந்தோரந்வேதி வ்யஸநமுதயமவா நிதிரபாம்" என்கிற சுலோகத்தில் ஓர் உத்தம வித்யார்த்தி பரீக்ஷை செய்யப்படுகிறார்; அவர்க்கு ச்லோகமே உபஸ்திதியில்லை. அதனால் அவர் மிகவும் சிரமப்படுகிறார். அப்போது சிறுமாணுக்கர்திரளில் உட்கார்ந்திருந்த யான் "அதை நான் சொல்லுகிறேன்" என்றேன் அப்பாடசாலையின் தலைமையுபாத்யாயரான சாமா. திருமலை தாதாசாரியர், அடியேன் ஏதோ வம்பு பேசுவதாக நினைத்து "கழுதை! வாயைமூடியிரு" என்று அதட்டினர். பரீக்ஷகரான கஸ்தூரி ஸ்வாமி "சொல்லப்பா! பார்ப்போம்" என்றார். உடனேயெழுந்து அந்த ச்லோகத்தைப் பூர்த்தியாகச் சொல்லி அர்த்தமும், தாத்பரியமும் விரியச்சொல்லி அதில் இரண்டாவது பாதத்தில் "ஜயதி ஜநிகர்த்து: ப்ரக்ருதிதா" என்ற விடத்திற்கு ச்சொல்லவேண்டிய "ஜநிகர்த்து: ப்ரக்ருதி:" என்னும் வியாகரண ஸூத்ரத்தின் விஷயங்களையும் சொல்லி முடித்தேன். அப்போது அடியேனுக்கு வயது பன்னிரண்டாதலால் அந்த நிலைமையில் யான் முராரி நாடக ச்லோகத்தைச் சொன்னதும், அதன் பொருளை உபந்யாஸ வகையில் உரைத்ததும் அவர்களுக்கு மிக மிக வியப்பாக இருந்தது. "காவ்ய பாடம் வாசிக்கிற உனக்கு இந்த ச்லோகம் எப்படித் தெரிந்தது?" என்று கஸ்தூரி ஸ்வாமி கேட்டார். "என் க்ருஹத்தில் எனது தகப்பனரிடத்தில் பலபேர்கள் வாசிக்கிறார்கள்; அவர்களில் முராரி நாடகம் வாசிப்பவர்களுமுண்டு; அவர்கள் வாசிக்கும்போது நான் கூடவிருந்து கேட்டுக்கொண்டிருப்பது வழக்கம்; அதனால் தெரிந்தது" என்றேன். அவரவர்கள் வாசிக்கிற எல்லா க்ரந்தங்களிலும் நீ பரீக்ஷை சொல்லுவாயா? என்று கேட்டார்; "நிச்சயமாகச் சொல்ல முடியாது; அனேகமாய்ச் சொல்லுவேன்; கேட்டுப் பார்க்கலாமே" என்றேன். பிறகு மற்ற வித்யார்த்திகளை விட்டுவிட்டு என்னை மாத்திரம் விசேஷமாகப் பரீக்ஷித்தார்கள். அவர்கள் த்ருப்தியடையும்படியாகவே சொல்ல இயன்றது. .... .... .... *



**15** ஸ்ரீமதுபயவே (வளர்புரம்) V. **பாஷ்யமையங்கார் ஸ்வாமி.** இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி இருபது ஸம்வத்ஸரங்களுக்கு மேலாகிறது. இந்த ஸ்வாமி கடைசியாகச் சில மாதங்கள் சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் பதவியை வஹித்து விச்ராந்தரானார். ஸ்ரீபெரும்பூதூர். எம்பெருமானார் ஸன்னிதியில் ஐந்தாறு வருஷகாலம் தர்மகர்த்ருபதவியை வஹித்திருந்து சில சீர்திருத்தங்கள் செய்தார். ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதிகாரியாய் விளங்கினார். இவருடைய திருக்குமாரர்கள் டாக்டர் உ.வே.V. ராமையங்கார். V.C ரங்கதுரை ஐயங்கார், V. C. பத்மநாபையங்கார் ஆகியமூவரும் திருமகளாரும் சென்னையில் உலகம் நிறைந்த புகழாளர்களாய் வாழ்கின்றனர் ... ●

## 16 ஸ்ரீமதுபயவே. நாவல்பாக்கம். நரஸிம்ஹாசாரியர்ஸ்வாமி

சிஷ்டாக்ரேஸரரும் வித்வத்வரேண்யருமான இந்த மஹாஸ்வாமி மைஸூரில் சாஸ்த்ராப்யாஸங்கள் செய்து ராஜமன்னார் ஸன்னிதி முதலானவிடங்களில் சில வாண்டுகள் வாழ்ந்து ஐம்பது திருநக்ஷத்ரங்களுக்குமேல் காஞ்சீவாஸத்தையே ஸ்திரமாகக்கொண்டிருந்தார். இடையில் காஞ்சியில் தீர்த்தகஷ்டம் நேர்ந்தபோது இரண்டொரு ஸம்வத்ஸரம் பழைய சீவரத்தில் எழுந்தருளி யிருந்தார் பெரும்பாலும் உஞ்சவ்ருத்தியையே ஜீவிகையாக அவலம்பித்திருந்தார். வேதாத்யயன ஸம்பத்துங் கொண்டிருந்தவர். இப்போது நாவல்பாக்கத்தில் ஏகாந்த சீலராக வாழ்பவரான ஸ்ரீமதுபயவே அய்யா. தேவநாதாசாரியர் ஸ்வாமி இவருடைய சீடர்களில் தலைமை பெற்றவர். இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து 25 ஸம்வத்ஸரமாகிறது. ...

## 17 ஸ்ரீமத் பரமஹம்ஸ. கருடபுரம் ஸ்வாமி

இந்த மஹாஸ்வாமியை க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்தே நன்கறிவேன். முதன் முதலாக மதுராந்தகத்தில் (கிருஹஸ்தராய்) ஸேவை ஸாதித்துப் பரமக்ருபை காட்டியருளினர். உத்தமாச்ரமம் ஸ்வீகரித்த பின் பெரும்பாலும் பெருமாள் கோயிலிலேயே யெழுந்தருளியிருந்ததாக நினைவு. நெல்லூர் ஜில்லாவில் மங்களம்பாடியென்கிற அக்ரஹாரத்தில் (பூர்வாச்ரமத்தில்) சிலவாண்டுகள் எழுந்தருளியிருந்து அங்குள்ளாரைத் திருத்திப் பணிகொண்டதாக அங்குள்ளார் நாளைக்கும் க்ருதஜ்ஞதாநுஸந்தானம் பண்ணிப்போருகிருர்கள் "ஸ்மிதபூர்வாபிபாஷீ" என்கிற விசேஷணம் ஸ்வாமிக்கு மிகப் பொருத்தமானது. தேவப்பெருமாளுடைய மங்களாசாஸனம் அசக்தியிலுங்கூட நாள் தவருமல் செய்து போந்தவர் நித்யம் ப்ரவசன நிரதராய் எழுந்தருளியிருப்பர். காஞ்சியிலேயே திருநாட்டுக்கெழுந்தருளி இருபத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயிற்று. அஸக்ருத் ஸ்மரணீயர்களான புண்ய புருஷர்களில் தலைவர். திருப்பதியிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமியிடத்தில் ஸாமான்ய சாஸ்த்ரமதிகரித்ததாக ஸாதிக்கக் கேட்டிருந்தேன். ஸ்ரீ பாஷ்ய ப்ரவசனத்தில் உத்தமாதிகாரி. ... ... ... ...

## 18 ஸ்ரீமதுபயவே திருப்பதி கிடாம்பி. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

இந்த ஸ்வாமி திருப்பதி கிடாம்பி அப்பாஸ்வாமி யென்றே ப்ரஸித்தர். வியாகரண வேதாந்தங்களில் வல்லவராய் மஹா சிஷ்டாக்ரேஸரராய் விளங்கினவர் ஸ்ரீமத் புரிசை ஸ்வாமிக்கு 'தக்ஷிணோ பாஹு:' என்னும்படி விளங்கினவர் ப்ரதிவாதிபயங்கர வம்சயர்களினுடைய தௌஹித்ரஸந்ததியாகையாலே அண்ணங்கராசாரியரென்று திருநாமம் பூண்டவர். நெடுங்காலம் திருப்பதிக்குத் திலகமாக விளங்கின மஹான். இவர் திருநாட்டுக்கெழுந்தருளி நாற்பத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயிற்று.

## 19 ஸ்ரீமதுபயவே யோகி. பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி

பலகாலம் திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமி வித்வானு யிருந்ததோடுகூட பிரபல தனிகராயுமிருந்தார். அதனுல் இந்த ஸ்வாமி செய்தருளின லோகோபகாரங்கள் அளவு கடந்தவை; உபயவேதாந்த க்ரந்தங்கள் பலவற்றை அச்

சிட்டு வெளியிட்டிருக்கிறார். அவற்றுள் இரண்டு மஹா க்ரந்தங்களை மட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன். (1) ஸ்ரீவசனபூஷண வியாக்கியானம் இரண்டு அரும்பதவுரைகளோடும் ஸ்ரீவசனபூஷண மீமாம்ஸா பாஷ்யத்தோடும் (ஆயிரம் பக்கங்களுக்குமேல் கொண்ட மிகப் பெரிய ஸ்ரீகோசம்) இம்மஹான் தெலுங்கு லிபியில் அச்சிட்டு வெளியிட்டது (2) ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் நிர்வசனாதிகளோடுங்கூட மிகப் பெரிய ஸ்ரீகோசமாகத் தெலுங்கு லிபியிலேயே அச்சிட்டார். மற்றும் பலபலவுண்டு. இந்த ஸ்வாமிக்கு சக்ரவர்த்தி திருமகன் கனவிலே ஸேவை ஸாதித்துத் திருவயோத்தியில் ஸன்னிதி ப்ரதிஷ்டை செய்யும்படி நியமிக்க, அந்த நியமனத்தை சிரஸா வஹித்து அயோத்யையில் கோலாசாட் என்று ப்ரஸித்தமான ஸரயூதீரத்தில் தாக்ஷிணாத்ய ப்ரக்ரியையிலே திவ்யஸன்னிதி நிர்மாணம் செய்வித்து ப்ரதிஷ்டை பண்ணியிருப்பது ப்ரஸித்தமான விஷயம். ... ... •

## 20 ஸ்ரீமதுபயவே தேவசிகாமணி. ராமாநுஜாசார்ய ஸ்வாமி

மண்டயம் தேவசிகாமணி ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்த இந்தவித்வான் பரமபதித்து முப்பத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாகிறது இவர் மைஸூரில் வாசித்து விசேஷத: மீமாம்ஸா சாஸ்த்ரத்திலும் உபயவேதாந்தங்களிலும் அத்விதீய வித்வன்மணியாக விளங்கினவர். அயோத்யையிலும் ப்ருந்தாவனத்திலும் பல ஸம்வத்ஸரங்கள் வாழ்ந்து சாஸ்த்ர ப்ரவசனம் செய்தவர் மிகச்சிறந்த க்ராந்திகர். அடையாறில் அச்சாகி வெளிவந்த அஹிர்ப்புத்நிய ஸம்ஹிதை வெகு ஆச்சரியமான பதிப்பு அதற்கு இந்த ராமாநுஜாசார்ய ஸ்வாமியே பரிஷ்காரகராயிருந்தவர். அந்த ஸம்ஹிதைக்கு இந்த ஸ்வாமியெழுதி வெளியிட்டுள்ள மிக விரிவான பூமிகையை வாசித்துப் பார்ப்பவர்களுக்கு இவருடைய வித்யாபரிச்ரமம் அத்விதீயமென்பது புலப்படும். இவருடைய லேகனங்களும் பாஷணங்களும் மிகச் சிறந்து விளங்கின. ... •

## 21 ஸ்ரீமதுபயவே திருக்கோட்டியூர். ஸௌம்ய நாராயணாசார்யர்

கோஷ்டீபுரம்ஸ்வாமியென்றே ப்ரஸித்தி பெற்றிருந்தவர் இந்த ஸ்வாமி. நியாய சாஸ்த்ரத்திலும் உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த ஞானமுடைய வித்வத்வரேண்யராக விளங்கினார் (கீழே ப்ரஸ்தாவித்த) ஸ்ரீமதுபயவே ஸ்ரீரங்கம் எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் ஸாமாந்ய சாஸ்த்ரமதிகரித்து அந்த ஸ்வாமியும் மெச்சும்படியாகத் தேர்ச்சி பெற்றவர். தமது திருத்தகப்பனாரான ஸுந்தரகோபாலாசாரியர் ஸ்வாமி ஸன்னிதியில் அத்யாத்ம சாஸ்த்ரங்கள் பயின்று நம்பெருமாள் ஸன்னிதியிலும் பெருமாள் கோயிலிலும் மதுராந்தகத்திலும் பலநாள் வஸித்து உபயவேதாந்தங்களும் ப்ரவசனம் செய்தவர். இதிஹாஸபுராண ப்ரவசனத்திலும் வல்லவர் கோஷ்டீபுரம் ஸ்வாமியிடத்தில் அடியேன் விசேஷித்துக் கண்ட குணம் பரமப்ராமாணிகத்வம். நிக்ரஹஸ்தானங்களுக்கு இடமற வ்யவஹரிப்பர். ஈட்டுப்ரவசனத்தில் அந்தரங்கமான விச்வாஸமுள்ளவர். ... ... ... •

## 22 ஸ்ரீமதுபயவே பண்டிதரத்னம் குப்பண்ணா ஸ்வாமி

இம் மஹாபுருஷர் பெரும்பாலும் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருந்தவர் அவ்விடத்திலுள்ள மஹாராஜ ஸம்ஸ்க்ருத வித்யாசாலையில் பல வருஷங்கள்

அத்யக்ஷராக எழுந்தருளியிருந்து நூற்றுக்கணக்கான வ்யக்திகளை நாநா சாஸ்த்ரங்களிலும் ப்ரவீணர்களாக்கி யருளினவர் சதுச்சாஸ்த்ர வித்வானான இவர்க்கு நியாய வேதாந்தங்களில் மிக்க ப்ராவீண்யமிருந்தது. எம்பெருமானார் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில் ஐம்பத்திருவர் என்று ஒரு ஸமூஹத்தை நியமித்தருளின ரென்பது ஸுப்ரஸித்தம்; அந்த ஸமூஹத்தில் இந்த ஸ்வாமியின் குடியும் சேர்ந்ததாம். ஆனதுபற்றியே ஸ்தானீகமென்ற உபபதமுமிவர்க்கு விளங்கிவந்தது.

## 23 ஸ்ரீமதுபயவே கவிபூஷணம். அத்தங்கி. குமாரதாதாசார்யர்

திருவல்லிக்கேணியில் ஸ்ரீமத். அத்தங்கி. குமாரதாதாசார்ய ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான வித்வந்மணி எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி ஸாஹித்ய க்ரந்தங்களில் நிகரற்ற மஹா வித்வான். ஸகல காவ்ய நாடகாலங்கார க்ரந்தங்களும் இந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களாயிருந்தன. வ்யாகரண வேதாந்த நிபுணர். கவித்வத்தில் மஹா நிபுணரென்பதை 'கவிபூஷணர்' என்னும் இவருடைய பிருதமே விளக்கி நிற்கும். இந்த ஸ்வாமியால் இயற்றி வெளியிடப்பட்டிருக்கின்ற உத்தர ராம சரித வியாக்கியானம் முதலான சில க்ரந்தங்களினால் இவர் சிறந்த க்ராந்திகர் என்பது தெற்றென விளங்கும். இந்தஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி நாற்பதைம்பது வருஷங்களுக்குமேல் ஆய்விட்டாலும் இவருடைய கீர்த்தி நிகரற்றது. இவருடைய பரிஸரத்தில் எப்போதும் பல வித்வான்கள் கூடியேயிருப்பர்கள். இவருடைய ஸகாசத்தில் ஏதாவது விஷய விசாரங்கள் நடந்துகொண்டேயிருந்ததை நன்கறிவேன்.

## 24 25 26 ஸ்ரீமதுபயவே திருநாங்கூர் ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமிகள் மூவர்

திருநாங்கூரில் பலமஹான்கள் எழுந்தருளியிருந்தார்கள். அங்கு வைகுந்த விண்ணகரம் ஸந்நிதிவீதியில் ப்ரதிவாதிபயங்கரம் பெரிய க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியும் சின்ன க்ருஷ்ணமாசார்யஸ்வாமியும் ப்ரஸித்தர்களாயிருந்த மஹநீயர்கள். "ஏகயோக்த்யா புஷ்பவந்தௌ திவாகரநிசாகரௌ" என்ற கணக்கிலே இவ்விரு மஹான்களையும் ஒருசேர அநுபவிக்கிறேன் அவர்களோடு மற்றொரு க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியையும் சேர்த்து அநுபவிக்கிறேன். அந்த ஸ்வாமி வண்புருடோத்தமன் வீதியில் எழுந்தருளியிருந்தார். வைகுந்தவிண்ணகரம் பெரிய க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி வித்யா நிதியாக எழுந்தருளியிருந்தவர். சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவராயிருந்ததோடு மஹாகவீச்வரராய் அனேக காவியங்கள் ஸ்தோத்ரங்கள் அருளிச் செய்திருந்தார். இந்த ஸ்வாமி அடியேனுடைய இளமையில் பல வருஷங்கள் ஸ்ரீ காஞ்சியிலெழுந்தருளியிருந்தபடியால் இந்த ஸ்வாமியிடத்திலும் சில நாடகங்கள் வாசிக்க நேர்ந்தது அடியேனுக்கு. இந்த ஸ்வாமி திருநாங்கூரில் குலகூடஸ்தர் ஸந்நிதியைத் திருப்ரதிஷ்டை செய்திருந்தார் 50 வருஷங்களுக்கு முன்பு சரமஸமயத்தில் உத்தமாச்ரமியாகித் திருநாட்டுக்கெழுந்தருளினார். இந்த ஸ்வாமிக்கு வித்வத்பஹுமானமாக (தோடா) என்கிற கரபூஷணம் கிடைத்திருந்தபடியால் "தோடா க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி" என்று வ்யபதேசமிருந்துவந்தது. இவர்க்கு ஸந்ததி இல்லாமையினால் இவர் ஏறியருளப்பண்ணின கூடஸ்த ஸந்நிதியும் பரிபாலனமில்லாமே போயிற்று. அதுமிகவும் சோசநீயம்.

"தோடா" ஸ்வாமியின் திருநாமமேகொண்டு இவருடைய ஸந்நிஹிதஜ்ஞாதியும் இவருடைய அடுத்த திருமாளிகைக்காரருமானவர் "சின்ன க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி" யென்றே வழங்கப்பட்டுவந்தார். இவர் ஸ்ரீமத் திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி ஸன்னிதியிலும் மற்றும் பெரியார்களிடத்திலும் நியாய வேதாந்தங்களும் பாஷ்ய பகவத் விஷயாதிகளும் அதிகரித்து மிகச் சிறந்த ப்ரவக்தாவாக விளங்கினார். சிலபல ஸம்வத்ஸரங்கள் சென்னை மாநகரில் சாரிடிகளில் ப்ரவசனநிரதராய் ப்ரக்யாதராயிருந்தார். இந்த ஸ்வாமியின் இரு திருக்குமாரர்களும் வித்வான்களாக விளங்கி வருகிறார்கள். இந்த ஸ்வாமிக்கே நாளது ஆடி மாதத்தில் உத்தரட்டாதியில் சதாப்தீ மஹோத்ஸவம் திருநாங்கூரில் ஐந்துநாள் நடைபெறவிருக்கிறது. ...

## 27 ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி

இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தவரும் விச்வவிக்யாத ஜ்ஞான வைராக்ய நிதியுமான இந்த ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவலோகம் முழுதும் அறியும். ஸ்வாமியின் திருத்தகப்பனார் ஸ்வக்ராமமாகிய ஸ்தலத்தை விட்டு இருதிருக்குமாரர்களுடன் காஞ்சீ வாஸமாக வந்து சேர்ந்து முதலில் எமது வீதியிலேயே ஸந்நிஹிதராகக் குடிவாழ்ந்திருந்த காலம் அடியேனுக்கு நன்றாக நினைவிலுள்ளது. கோழியாலம் ராகவாசார்ய ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்து தேவப்பெருமாள் ஸன்னிதி சடகோபநிலய பாடசாலையில் வித்யார்த்தியாக வந்து சேர்ந்து அங்கு வியாகரணோபாத்யாயராக இருந்த ஸ்ரீமத் கண்டாவதாராசார்ய ஸ்வாமியிடம் வியாகரண சாஸ்த்ரமதிகரித்து, பிறகு திருப்பதியில் கோபாலாசார்ய ஸ்வாமியென்று ப்ரஸித்தராய் மஹா ஜ்ஞான நிதியாக எழுந்தருளியிருந்த உத்தமாச்ரமியையடிபணிந்து அத்யாத்ம சாஸ்த்ரங்களையதிகரித்து மஹாவாக்மியாய் விளங்கி, திருவஹீந்திரபுரத்தில் துரீயாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டு தக்ஷிணதிவ்ய தேசயாத்திரைகள் செய்து ஸ்ரீகாஞ்சியில் ஸ்திரவாஸமாக நெடுநாள் எழுந்தருளியிருந்தார் பூர்வாச்ரமத்திலும் உத்தமாச்ரமத்திலும் ஸ்வாமியோடு நெருங்கிப் பழகினவடியேன் ஸ்வாமியின் ஜ்ஞாநஸாம்ராஜ்யத்தை நன்கறிந்தவன். ... ... ... ...

## 28 ஸ்ரீமதுபயவே நவநீதம் க்ருஷ்ணமாசாரியார் ஸ்வாமி

திருக்குடந்தைக்கு ஸமீபத்திலுள்ள திருவிண்ணகரென்கிற ஒப்பிலியப்பன் ஸன்னிதியில் நவநீதம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியென்று ப்ரஸித்தரான மஹான் எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி 40 ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு திருநாட்டுக்கெழுந்தருளினவர். இந்த ஸ்வாமியினுடைய க்ருபைக்கு அடியேன் மிக்க இளமையிலேயே இலக்காகப் பெற்றவன். மஹா ஜ்ஞாநாதிகராயும் சிஷ்டவரிஷ்டராயுமெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே அடியேன் சிலஸமயம் திருவிண்ணகர்க்கு விடைகொண்டிருக்கிறேன் ஸ்வாமியும் பன்முறை காஞ்சிக்கெழுந்தருளிப் பரமாநுக்ரஹம் செய்தருளியிருக்கிறார். மஹாபாரதம், ச்ருதப்ரகாசிகைக்கு வியாக்கியானமான பாவப்ரகாசிகை, ஸவ்யாக்க்யானமான மீமாம்ஸாபாதுகை முதலான க்ரந்தரத்னங்களை க்ரந்தலிபியிலும், நயமயூக மாலிகை சாரீரக சாஸ்த்

ரார்த்த தீபிகை முதலான க்ரந்தங்களை தேவநாகராக்ஷரத்திலும் பதிப்பித்த மஹோபகாரகர். இவருடைய திருக்குமாரரான ஸ்ரீராமதேசிகர் விளக்கில் கொளுத்தின தீவட்டியாய் விளங்குபவர். ... ... ... ... *

## 29 ஸ்ரீமதுபயவே S. கோபாலஸ்வாமி ஐயங்கார்

சென்னை மயிலாப்பூரில் ப்ரஸித்த அட்வகேட்டாக விளங்கினவர் எஸ். கோபாலஸ்வாமி ஐயங்கார் ஜகத்ப்ரஸித்தரான ஸ்ரீமான் ஸர். எஸ். வரதாசார்ய ஸ்வாமியின் ஸாக்ஷாத் மாதுலர் இவர். உபயவேதாந்தங்களையும் வரியடைவே கற்றவர். (இவர் ஸ்ரீமத் வரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தர்.) திருநாராயணபுரத்தில் ப்ரஸித்த வித்வந்மணியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. மண்டயம் ஆழ்வார் ஸ்வாமியைச்சில பல வருஷகாலம் தமது பங்களாவில் எழுந்தருளப் பண்ணினவத்து அவர் ஸந்நிதியிலே உபயவேதாந்த ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் நன்கு அதிகரித்துப் பல வக்கீல்களுக்கு ப்ரவசனமும் செய்தவர். அடியேனுடைய மாதாமஹ ஜீயர் ஸ்வாமி ஸந்நிதிக்கு அடிக்கடி வந்து பஹுச்ருதாக்ரேஸரர் என்று ஸ்வாமியால் விருது சாத்தப்பெற்றவர். சென்னையில் அஹோபிலமடத்துப் பத்ரிகையாக முதன்முதலில் ஆரம்பம் செய்யப்பட்ட வேதாந்ததீபிகாபத்ரிகைக்குச் சிலவருஷகாலம்ஸம்பாதகராக இருந்தவர் அடியேனைக்கொண்டு சில பல க்ரந்தங்கள் எழுதுவித்துப் பிரசுரம் செய்வித்தவர். அடியேன் பஞ்சஸ்தவாதிகளுக்கு வியாக்கியானமெழுத இவரேகாரணபூதர்.

## 30 ஸ்ரீமதுபயவே தண்டி பட்டப்பா தாதாசார்யர் ஸ்வாமி

ஸ்ரீகாஞ்சீ ஸந்நிதி வீதியில் பதினாறுகால் மண்டபத்திற் கெதிர்த்திருமாளிகையில், தண்ட்ரி. ஸ்ரீநிவாஸதாதாசார்ய ஸ்வாமியென்று திருநாமமுடையராய் பட்டப்பாஸ்வாமியென்றே வழங்கப்பட்டு வந்தவர் இந்த மஹா புருஷர். இவர் அடியேனுடைய திருத்தகப்பனுர்க்கு ஸஹாத்யாயியாய் *பஹி: ப்ராண இவாபர:* என்னும்படியிருந்தவரென்று திருத்தகப்பனுரே ஸாதிக்கக் கேட்டிருந்தேன் அடியேனுடைய பதினைந்து பிராயத்திற்குள்ளாகவே இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து விட்டார் அப்போது இவர்க்கு நாற்பத்தைந்து திருநக்ஷத்ரங்கூட நிரம்பவில்லையென்று ஞாபகம். அடியேன் பாடசாலைக்குப் போகிறபோதும் திரும்புகிறபோதும் இந்த ஸ்வாமியிடத்தில் சற்றுப்போதாவது வார்த்தையாடாமலிருப்பதில்லை. இது திருத்தகப்பனுருடைய நியமனத்தினுலுமாயிற்று. திருப்புட்குழியப்பா ஸ்வாமியின் வித்யார்த்திகளில் இவர் தலைவராயிருந்து, சதுச்சாஸ்த்ரங்களிலும் துல்யமான பாண்டித்யம் பெற்றிருந்தார்

## 31 ஸ்ரீமத். பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கர்

நெடுநாள் அஹோபிலமடாஸ்தானத்தை யலங்கரித்திருந்து முப்பது வருஷங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்த ஸ்ரீமத் இஞ்சிமேடு ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் இஞ்சிமேடு ரங்கநாதாசார்ய ஸ்வாமி யென்று வ்யபதிஷ்டர். திருப்பதியில் ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸந்நிதியில் நெடுநாள் வாழ்ந்து ஸாமாந்ய சாஸ்த்ரங்களை யதிகரித்து உபயவேதாந்த ப்ரவர்த்தந ப்ரவீணராய் காஞ்சியில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்தார் அடியேனுடைய க்ருஹத்திற்கு அதிஸமீபத்திலேயே ஒரு

திருமாளிகையை ஸ்வகீயமாகக் கொண்டு குடிவாழ்ந்து வந்தார். அப்போது இருவோமுக்கும் மிக நெருங்கின பழக்கம் ஏற்பட்டது; அனுஷ்டானத்திற்கு வெள்ளக்குள மெழுந்தருள்வர் அடியேனுடைய க்ருஹத்தின் பக்கத்திலுள்ள ஸந்து வீதி வழியாகவே அந்தளத்திற்குச் செல்லவேண்டுமாதலால் இருவரும் ஒன்றுசேர்ந்தே குளம் செல்வது தினப்படியான வழக்கம். திரும்புகிற ஸமயத்தில் சேர்த்தி ஏற்படுவது அரிதாகும். செல்லுகிற ஸமயத்தில் நியமேந சேர்ந்துதான் செல்வது. அப்போதைய ஸம்பாஷணைகள் ஐம்பது வருஷங்களுக்கு மேலானாலும் மறக்க முடியாதவை. திருப்பதியில் தாம் வாழ்ந்தபோது ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி பக்கலிலே தாம் அநுபவித்த விசேஷங்களை ஒவ்வொருநாள் ஒவ்வொன்றாக ஸாதித்தருள்வர் மற்றும் அநேக க்ராந்திக விஷயங்களையும் ஸாதித்தருள்வர். இடையிடையே ஸம்ப்ரதாயார்த்த சர்ச்சைகளும் நடைபெறும். கோபதாபங்கள் சிறிதுமில்லாமல் புன்முறுவலோடே ஸாதிப்பர்; துர்முறுவல் கொண்ட முகத்துடனே கேட்டருள்வர். மனச்சாக்ஷியை மீறியோ அப்ராமாணிக வழியை யவலம்பித்தோ விதண்டாவாதமாகவோ ஓரக்ஷரமும் ஸாதிக்கமாட்டார் அந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் விசேஷித்து அநுபவித்த குணமிது. ... •

## 32 ஸ்ரீமத்பரமஹம்ஸ தேரழுந்தூராண்டவன்

இப்போது ஆண்டவன் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்ற திருக்குடந்தை யாண்டவனுக்கு முந்தினவர் தென்பரை யாண்டவன்; அவர்க்கும் முந்தினவர் ஆக்கூராண்டவன். அவர்க்கும் முந்தினவர் தேரழுந்தூராண்டவன். அந்த மஹா ஸ்வாமியை முதன் முதலாகத் திருநாராயணபுரத்தில் வைரமுடி யுத்ஸவத்தில் ஸேவிக்கப்பெற்று அப்போதே பரமக்ருபைக்குப் பாத்திரமாயினேன். அதன் பிறகு விரைவிலேயே ஸ்ரீகாஞ்சிக் கெழுந்தருளி வேகவதிக்கரையில் தர்மகர்த்தா தோட்டமென்று ப்ரஸித்தமாக வழங்குமிடத்தை ஆச்ரமமாகக் கொண்டு பல ஸம்வத்ஸரங்கள் ப்ரவசனம் செய்து கொண்டெழுந்தருளியிருந்தார். தினப்படியாக ஏதாவதொரு ஸமயத்தில் இங்குவந்து போகவேணுமென்று அடியேனுக்கு கடுங்கட்டளை யிட்டிருந்தார். 'இந்த ஆஜ்ஞையை நிறைவேற்ற அடியேனாலாகாதே' என்று விஜ்ஞாபித்து 'ஸ்வாமி தேவப்பெருமாளை மங்களாசாஸனம் செய்தருள நியமேந எழுந்தருளுகிறபடியால் அங்கே ஸேவித்துக் கொள்ளுகிறேன்' என்று சொல்லி அப்படியே நாடோறும் அரைமணி காலத்திற்கு மேல் ஸம்பாஷணம் ப்ராப்தமாகி வந்தது ஆச்ரமத்திற்கு விடைகொள்வதும் பல்காலுண்டு. அப்போது அடியேன் சென்னை முதலான விடங்களை இறைபுமறியாமல் ஸ்வஸ்தானத்திலேயே நியதமாயிருந்துவந்தபடியால் நாள் தவறுமல் ஸேவித்து வார்த்தை யாட பாக்கியம் வாய்த்தது. ஸ்வாமி பக்கலில் வைதுஷ்யத்திற்காட்டிலும் ராஸிக்யமே விஞ்சியிருந்தது மிதபாஷித்வ மென்பதை ஒருநாளுங் கண்டிலேன்.

ஒருநாள் ஸம்பாஷித்துக்கொண்டிருக்கையில் "கோபால இதிக்ருஷ்ண! த்வம் ப்ரசுரக்ஷீரவாஞ்சயா, ச்ரிதோ, மாத்ருஸ்தந க்ஷீரமப்யஹோ துர்லபம் க்ருதம்" என்கிற ச்லோகத்தை அடியேன் விஜ்ஞாபித்து விவரிக்க நேர்ந்தது; உடனே ஆண்டவன்

'இந்த சுலோகத்தைத் தமிழ்ப்பாட்டாக மொழிபெயர்த்துச் சொல்லுவீரா?' என்று ஸாதிக்க, உடனே,

கண்ணா! நின்னை ஆயனென்று கண்டு மிக்க பால்பெறற்
கெண்ணி நின்ன பாதபங்க யத்தை நண்ணினேனரோ
எண்ணமீது மாறுபட் டொழிந்தவாறு கேட்டியோ
அன்னைபாலு மென்றனைக் கருமையாக்கினையரோ

என்று விஜ்ஞாபித்தேன். ஸ்வாமியும் திருவுள்ளமுவந்து பல வார்த்தைகள் ஸாதித்தருளினார்

[கருத்து — கண்ணா! நீ இடையனுகையாலே உன்னையடைந்தால் மிக்க பால் கிடைக்குமென்றுசைப்பட்டு வந்தடைந்தேன். ஏற்கனவே கிடைத்துக் கொண்டிருந்த தாய் முலைப்பாலும் கிடைக்காதபடி செய்திட்டாயே! என்கை. மறுபிறவி தவிரத்திருத்தினையென்கை "ஸ்தநந்தயத்வம் ந புநர் பபூவ" இதி யாதவாப்யுதயே ]

ஸர்வபூதஸுஹ்ருத்தாக எழுந்தருளியிருந்தது தேரழுந்தூராண்டானுக்குத் தன்னேற்றம் அவரை ஸௌசீல்யநிதியென்றே சொல்லவேணும் காஞ்சியிலேயே திருநாட்டுக்கெழுந்தருளினர். (தொடரும். இன்னும் 30 ஸ்வாமிகளின் பெருமைவரும்)

## புது டெல்லியில் ஸ்வாத்யாய ஜ்ஞான யஞ்ஜம்

புது டெல்லியிலுள்ள ஸ்ரீராம் மந்திரில் ஜூன் மாதம் 27ம் தேதி முதல் ஜூலை மாதம் 4ம் தேதிவரை 58வது ஸ்வாத்யாய ஜ்ஞான யக்ஞம் ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது

இந்தியாவின் அநேக இடங்களிலிருந்து வேத பண்டிதர்கள் ரூ ஸ்ராா கூடி ரிக், யஜுர், ஸாம அதர்வண வேதங்களும், திவ்ய ப்ரபந்தம், ஸ்ரீ விஷ்ணு புராணம், ஸ்ரீபகவத்கீதை, ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணங்களும் மிகவும் கம்பீரமாகவும் விமரிசையாகவும் இரண்டு வேளையும் நடைபெற்றது. இந்த மஹோத்ஸவத்தை Mr. Chief Justice T. V. R. TATACHARIAR துவக்கி வைத்தார்.

இந்த யக்ஞம் முடியும் தினமான ஜூலை 4ம் தேதி டெல்லியிலுள்ள நேபாளத்தின் தூதுவரும் Cultural Attacheயும், Coursellerலும் வந்திருந்து இந்த மஹோத்ஸவத்தை சிறப்பித்தனர். இதைப்போன்ற ஒரு யக்ஞம் நேபாளத்திலும் நடைபெற நேபாள அரசாங்கம் அனுமதிக்கலாம் என்று நம்புகிறோம்.

மேற்படி யக்ஞத்திற்கு, ஆந்திரப்பிரதேச Commerce and Industrieயின் மந்திரி ஸ்ரீமான் K. B. நரஸப்பாவும் அநேக பார்லியமெண்டு மெம்பர்களும் வந்திருந்து இந்த உத்ஸவத்தை சிறப்பித்தனர்.

இந்த உத்ஸவத்தை மிகவும் விமரிசையாக முடிப்பதற்குக் காரணமாய் இருந்த இந்த யக்ஞ உத்ஸவத்தின் காரியதரிசியான ஸ்ரீமான் S. ராமஸ்வாமி அவர்களுக்கு டெல்லி மாநகர மக்களின் சார்பாகவும், ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகளின் சார்பாகவும் நான் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஸ்வாமிக்கு நல்ல ஆரோக்யமும், தீர்க்க ஆயுளையும் கொடுத்து, மேலும் மேலும் அநேக நல்ல காரியங்களைச் செய்ய சக்தியைக் கொடுக்கவேண்டும் என்று ஸ்ரீலோகக்ஷேமராகவஸ்வாமியை வேண்டிக்கொள்கிறேன். - A. K. கிருஷ்ணஸ்வாமி

திவ்யப்பிரபந்தபகவத்கதாம்ருதம் 2—00
திவ்யப்பிரபந்தஸாரத்திரட்டு 1—00

## ஸகல ஸ்தோத்ர பாடங்களின் வியாக்கியானங்கள்

P.B.A. ஸ்வாமியின் மணிப்ரவாள விசதவியாக்கியானங்கள்.
ஆளவந்தார் ஸ்தோத்ரமென்கிற ஸ்தோத்ரரத்னமும் சதுச்ச்லோகியும், ஜிதந்தா ஸ்தோத்ரமும் 5—00
எம்பெருமானருளியகத்யத்ரயம் 3—00
முகுந்தமாலை, யதிராஜவிம்சதி 2-50

## கூரத்தாழ்வான் பஞ்சஸ்தவங்கள்

ஸ்ரீவைகுண்டஸ்தவம் 3—00
அதிமாநுஷஸ்தவம் 3—00
ஸுந்தரபாஹுஸ்தவம் 5 00
வரதராஜஸ்தவஸ்ரீஸ்தவங்கள் 4-50

## பட்டர் அருளிச்செய்த ஸ்தவங்கள்

ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசதகம் 5—00
ஷ உத்தரசதகம் 5-00
ஸ்ரீகுணரத்நகோசம் 2 00
அஷ்டச்லோகீ 1—00
ஸுதர்சநசதகம் 5—00

நித்யாநுஸந்தேய ஸ்தோத்ரமாலா
(இதில் அடங்கிய ஸ்தோத்ரங்கள்)
ஸ்ரீரங்கநாதஸ்தோத்ரம்.
க்ஷமாஷோடசி ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்ரம், தேவராஜாஷ்டகம், ஸ்ரீ தேவராஜ மங்களம், நரஸிம்ஹாஷ்டகம், காஞ்சீ க்ஷேத்ர ஸங்க்ரஹம். தேவாதிராஜ மஞ்சகம், பராங்குசாஷ்டகம், நக்ஷத்ரமாலிகை தாடீ பஞ்சகம், ராமாநுஜ சதுச்லோகி, ஸ்ரீவரவரமுநிபூர்வ திநசர்யா, உத்தரதிநசர்யா, ஸ்ரீகலிவைரிகுருதசகம் வரவரமுனி வைபவஸ்துதி, லோகாசார்ய வைபவஸ்துதி (ஆகிய 17) 5-00
ஸ்ரீக்ருஷ்ணகுருஸ்துதி(பெரியவாச்) 1-00
தேசிக ஸ்தோத்ரமாலை 6-00
(இதிலடங்கியுள்ள ஸ்தோத்ரங்கள்)

1. வைராக்ய பஞ்சகம்
2. கோதாஸ்துதி
3. ஹயக்ரீவ ஸ்தோத்ரம்
4. பரமார்த்த ஸ்துதி
5. ந்யாஸ தசகம்
6. பகவத்த்யாந ஸோபாநம்
7. தசாவதார ஸ்தோத்ரம்
8. வேகாஸேது ஸ்தோத்ரம்
9. அஷ்டபுஜாஷ்டகம்
10. காமாஸிகாஷ்டகம்
11. ஷோடசாயுத ஸ்தோத்ரம்

## ரஹஸ்யங்கள்

முமுக்ஷுப்படிஸாரம் 3—00
தத்வத்ரயஸாரம் 3-00
ஸ்ரீவசனபூஷணஸாரம் 4—00
ஆசார்சஹ்ருதயஸாரம் 5—00
இவை நான்கும் மூலம் மட்டும் 2-00
மணவாளமாமுனிகளருளிச்செய்த ஸகலக்ரந்தங்களும்- ஸ்ரீவரவரமுநீந்த்ரக்ரந்தமாலை 25—00
ரஹஸ்யப்ரமாணத்திரட்டு 3-00

மற்றும் விரிவான கியாடலாக் காண்க.

ஏக காலத்தில் நூறு ரூபாய் விலையுள்ள புத்தகங்கள் வாங்கினால் 25 ரூ. கமிஷன் 50க்கு 10ரூ. கமிஷன்

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்கள்
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M: O. செய்பவர்கள்

P. B. ANNANGARACHARYA.
*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

---

If un-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,
Kanchipuram. Pin Code-631 503.

---

To
Sriman/Srimathi

690. Sri P.A.THIRUVENKATACHARYA,
16, M.M.Sannidhi Street,
SRIPERUMBUDUR 602 105.



---

Edited and Published by P. B. Annangaracharya Swami
and Printed by E. Devarajan at Sri Kamakshi Press.
No. 44-e. Thirukatchinambi Street, Kancheepuram-631503